22nd March 1961]

**THE HON. SRI C. SUBRAMANIAM:** அதற்கு ஆதாரம் கிடையாது ; இந்த விஷயத்தில் சர்க்கார் ஒரு முடிவு எடுப்பதற்கு முன்பு மற்ற விவரங்களைச் சொல்ல முடியாது.

*Hindi in Teachers' Training Schools*

* 991 *Q.*—**SRI A. VEDARATHNAM:** கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளில் இப்போது ஹிந்தி போதனை நிறுத்தப்பட்டிருக்கிறதா ?

(இ) அப்படியானால், இதன்மூலம் வேலை இழந்த ஆசிரியர்கள் எத்தனை பேர் ?

(உ) இப்படி வேலை இழந்த ஹிந்தி பண்டிதர்களுக்கு அரசாங்கம் வேறு என்ன வாய்ப்பளித்திருக்கிறது ?

**THE HON. SRI C. SUBRAMANIAM:**

(அ) Yes, Sir.

(இ) Eighteen, Sir.

(உ) No steps were taken to provide these pandits with alternative appointments as such of those as were qualified could secure employment in the high schools which were opened in 1960–61. The appointment of unqualified teachers was purely on a temporary basis and no steps were necessary to retain them in service.

**SRI A. VEDARATHNAM:** தகுதி பெற்ற ஹிந்தி பண்டிதர்கள் எல்லோரையும் ஹைஸ்கூல்களில் அப்ஸார்ப் செய்யப்பட்டுவிட்டதா ? ஹிந்தி பண்டிதர்கள் இல்லாத இடங்களுக்கு அவர்களை நியமிக்க அரசாங்கம் முன் வருமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** இது சர்க்கார் பள்ளிகளில் இல்லை ; தனிப்பட்ட பள்ளிகளில் அவசியம் இருக்கும் இடங்களில் இந்த பண்டிதர்கள் நியமிக்கப்படுவார்கள்.

**SRI P. S. K. LAKSHMIPATHI RAJ:** ஒரு சில பள்ளிகளிலே ஆசிரியர்களே ஹிந்தி வகுப்புக்குப் போகும் மாணவர்களை வகுப்புக்குப் போகாமல் வெளியே போய்விடுங்கள் என்று சொல்வது சர்க்காருக்குத் தெரியுமா ? அதைத் தடுக்க ஏதாவது நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** அதுமாதிரி தகவல் இல்லை ; அங்கத்தினருக்குக் கிடைத்தால் அதை எனக்குத் தனியாக எழுதி அனுப்பக் கோருகிறேன்.

*Wage Board for beedi workers*

* 992 *Q.*—**SRI V. K. KOTHANDARAMAN:** கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பீடித் தொழிலாளர்களுக்கு சம்பள நிர்ணய போர்டு அமைக்க உத்தேசமுண்டா ?

(இ) இது விஷயமாக நமது சர்க்கார் மத்திய சர்க்காருக்கு என்ன ஆலோசனை கூறியுள்ளார்கள் ?

**THE HON. SRI R. VENKATARAMAN:** (அ) பீடித் தொழிலாளர்களுக்கு சம்பள நிர்ணய போர்டு அமைக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் இல்லை.

[22nd March 1961

(இ) இது விஷயமாக மத்திய சர்க்காரிடமிருந்து ஒரு தகவலும் வரவில்லை. இந்த சர்க்காரும் மத்திய சர்க்காருக்கு ஒரு ஆலோசனையும் கூறவில்லை.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், ஒரு ராஜ்யத்திலே, குறிப்பாக நம் ராஜ்யத்திலே மினிமம் வேஜ் இருக்கும்போது, பக்கத்து ராஜ்யங்களிலே அதைவிடக் குறைந்த கூலி இருப்பதால், இந்தக் கூலியைக் கொடுக்க முடியாமல், பக்கத்து ராஜ்யங்களுக்கு பீடி தொழிற்சாலைகளை எடுத்துப் போய் நடத்தும் காரணத்தால், நம் சர்க்காருடைய வருமானமும் தடைபடுகிறது, இந்த ராஜ்யத்திலே தொழிலாளிகளுக்கும் வேலையில்லாமல் போகிறது என்கிற காரணத்தினால், வெகு விரைவில் அகில இந்திய ரீதியில் ஒரு பீடி நிர்ணய போர்டை நிறுவ நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினரின் முன்னுரை அவ்வளவும் தவறு. பக்கத்து ராஜ்யங்களில் நம் ராஜ்ய மினிமம் வேஜைவிடக் குறைவு இல்லை. ஆகவே ஆலோசனைக்கு அவசியம் இல்லை.

SRI K. SATTANATHA KARAYALAR : பீடிக்கு குறைந்த பட்ச கூலி நிர்ணயம் செய்வதில் நீளம் ஒரு இன்ச், ஒன்றரை இன்ச், இரண்டு இன்ச் என்ற அடிப்படையில் செய்திருக்கும்போது, அது இடத்திற்கு இடம் மாறுபடுவதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : மினிமம் வேஜ் அந்த அடிப்படையில் முதலில் சிபாரிசு செய்யப்பட்டது. சென்ற ஜூலை மாதம் 1960-ம் வருஷத்தில், ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டோம். அது பீடித் தொழில் பூராவுக்கும் அமுலாகும். அந்த ஒப்பந்தத்தில் ஜாடி பீடி, சாதா பீடி என்ற இரண்டே வகையில் கூலி நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. அது இப்பொழுது திருப்திகரமாக அமுல் நடக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN : ஆந்திர ராஜ்யத்திலே, சித்தூர் பிராந்தியத்தில் ரூ. 1–2–0 அல்லது 1–6–0 தான் கூலி ; ஆகையினால் குறிப்பாக இன்றைக்கு " எக்ஸ்பிரஸ் " பீடி, " 7 மார்க் " பீடி இது போன்ற வைகளை பல கம்பெனிகள் நடத்திக்கொண்டு வருகிறார்கள் என்பது அமைச்சருக்கு ஞாபகத்தில் இருக்கும். இதுபற்றி வடஆர்க்காடு பீடி தொழிற்சங்கம் எழுதியிருக்கிறது, பரிசிலனை செய்ய வேண்டும் என்று. ஆகவே ஒரு சம்பள நிர்ணய போர்டைக் கொண்டுவர முயற்சி எடுக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சர்க்காருக்கு இருக்கும் தகவலில் கனம் அங்கத்தினர் சொன்னது தவறு என்று இருக்கிறது.

*Department enquiries on Police officers (Kanyakumari)*

* 993 *Q.*—SRI T. S. RAMASWAMY : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of Police officers against whom departmental enquiries were made in Kanykumari district in 1960;

(*b*) the nature of punishments given to them and the reasons therefor;

(*c*) the number of appeals pending before the Government at present ; and

(*d*) the number of Police officers dismissed in other districts during 1959–60 and 1960–61?